# சூப்பர்

# ஜோக்ஸ்

சிரிக்க வாழ வேண்டும் - பிறர் சிரிக்க வாழ்ந்திடாதே!



2-3



சூப்பர்

# ஜோக்ஸ்

*சிரித்து வாழ வேண்டும் - பிறர் சிரிக்க வாழ்ந்திடாதே!*

*எல்லாருக்கும் வணக்கங்க !*

இந்த ஜோக்ஸ் புத்தக மூலமாக நான் உங்களுக்கு அறிமுக ஆகுகிறேங்கோ! அப்றம் போன மாசத்தோட "ஞானா" காணாமா போயிட்டாராம் அதனால நான் இங்கே குப்பை கொட்டிகிட்டு இருக்கிறேன். இந்த புத்தகத்தில் இடம் பெற்ற அனைத்து ஜோக்குகளும் உங்களுடைய படைப்புகள்தான். ரொம்ப நல்லா எழுதுறீங்க.... நான்தான் எப்படி தரம் தரப்போறேனோ தெரியல. இருந்தாலும் நம்ம முதலாளி சேகர் நான் இருக்கேன் பயப்படாதே! என் எனக்கு தைரியம் கொடுத்து உள்ளாரு. சும்மா பூந்து ஜமாயித்திடலாம் பார்த்தாலும் நீங்களும் எனக்கு பக்கபலமா இருக்கோணும் இல்லீயா.:.. அதனால வழக்கமாக நீங்க எழுதுற ஜோக்ஸ்களை எழுதி அனுப்பி வையுங்க. நானும் உங்களோட சேர்ந்து எனக்கு தெரிந்த ஜோக்ஸ்களை சேர்த்து கொடுக்க உள்ளேன்.



யார், யாரு இருக்காங்க என்பது முக்கியம் இல்ல! யாரு எப்படி எழுதி இருக்காங்க என்பதுதான் முக்கியம். அதுவும் எல்லாரும் அவங்கவங்க (ஜோக்ஸ்) அதுல உறுதியா இருக்கணுங்கறதுதான் முக்கியம்.

தொடர்ந்து எழுதுங்க !

வணக்கம்.

*ஆசிரியர் :*

**ஞானசேகரன்**

''என்னடி மீனா, மாப்பிள்ளையோட போட்டோவைக் கூட பாக்காம மாப்பிள்ளைய எனக்கு ரொம்ப பிடிச்சுப் போச்சின்னு சொல்கிறாயே எப்படி?''

''மாப்பிள்ளைதான் சூப்பர் ஜோக்ஸ் பத்திரிக்கையில ஜோக்ஸ் எழுதுறாரே. அதை படிச்சு சிரிச்சு வயிறு வலிச்சே போச்சு. மாப்பிள்ளை ரொம்ப கலகலப்பான ஆளாத்தான் இருக்கார்''

**கவிஞர் த. முருகன்,** மருக்காலங்குளம்

**(இரு நண்பர்கள்)**

''டேய் நேத்து என் கனவில நான் பேயப் பாத்தேன்டா''

''அடப்போடா நானு நெசத்திலேயே 20 வருஷமா பேயோடதாண்டா குடும்பமே நடத்துறேன்''

! ! ! . . . . ! ! !

**கவிஞர் த. முருகன்,**
மருக்காலங்குளம்

''கம்ப்யூட்டர் என்ஜினியருக்கு என் பொண்ண கொடுக்க நெனச்சது ரொம்ப தப்பாப் போச்

''என்ன நடந்தது''?

''வரதட்சனையா ஒரு ''புரோகிராம்'' எழுதிக் கொடுத்தாத்தான் தாலியே கட்டுவேண்ணு சொல்

**கவிஞர் த. முருகன்**
மருக்காலங்குளம்



★ ''டேய் ராமசாமி எனக்கு பொறந்த மூணு பசங்களும் தருதலையாப் போச்சுடா. மூத்த பையன் எப்பப் பார்த்தாலும் கத்தியை எடுத்து கொண்ணுடுவேண்ணு சொல்றான். அடுத்தவன் வாயிலிருந்து ஒரு வார்த்த கூட உண்மையே வர மாட்டேங்குது. கடைசிப் பையங்கிட்ட எவ்வளவு பணம் கொடுத்தாலும் ஏப்பம் விட்டுட்டு அங்கேயும் இங்கேயும் ஒடுறான் நான் என்ன செய்ய''?

''கவலைப்படாதே மூத்தவன டாக்டராக்கிடு. அடுத்தவன வக்கிலாக்கிடு கடைசிப் பையன அரசியல் வாதி ஆக்கிடுடா எல்லாம் சரியா போகும்.''

**கவிஞர் த. முருகன்,**
மருக்காலங்குளம்



★ "டேய் பாலு தலையில கைய வைச்சுக்கிட்டு என்னடா ஒரே கவலையா இருக்க? என்னாச்சு?"

" என் பெண்டாட்டியும் என் அம்மாவும் சண்டை போட்டதை "வீடியோ" எடுத்து ரெண்டு பேரும் ரெண்டு விதமாக எடுத்து காண்பிச்சு என்னை குழப்பிட்டாங்கடா" . கவிஞர் த. முருகன்,

மருக்கரலங்குளம்

★ (முதலிரவில்)

*கணவன்* : 'ஏண்டி என்னோட வர்ணிப்பைக் கேட்டு உமா, கலா, மாலா, சுதாவே மயங்கிட்டாங்க நீ மட்டும் அப்படியே இருக்கியே"?

*மனைவி* : நீங்க வந்ததிலிருந்து சுரேஷ் மாதிரி வர்ணிச்சுக்கிட்டே இருந்தா எப்படி. ரமேஷ் மாதிரி நெக்லஸ் எதாவது போட்டு விடலையே அதான் . . . .

*கணவன்* : ! ! ! ? ? . . . ? !

அகவிஞர் த. முருகன்.

மருக்காலங்குளம்

''பைனான்ஸ் கம்பெனி நடத்தினவரைப் போய் தேர்தலுல நிக்க வைச்சது தப்பாப்போச்சு''

''என்ன செய்தார்''?

''தொகுதியில நிக்கிறதுக்கு நம்ம தலைவரு கொடுத்த தேர்தல் செலவு தொகைய சுருட்டிக்கிட்டு ஓடிட்டாரே.

கவிஞர் த. முருகன், மருக்காலங்குளம்





கணவன் : ''டார்லிங்! நான் திடீரென செத்துப் போயிட்டா என்ன செய்வே''-

மனைவி : இப்படி ஏதாவது ஏடா கூடமா நடந்தாலும் நடக்குண்ணு தாங் நான் ஏறகனவே ரெடி பண்ணி வைச்சிருக் கேனே

கணவன் : !!!!!!

*கவிஞர் த முருகன்*
மருக்காலங்குளம்

*மகன் :* ''அப்பா இனிமே என்னை அடிச்சீங்க அதை நான் வீடியோ எடுத்து ''அம்மா'' கிட்ட காண்பிச்சிருவேன்''

*அப்பா :* அடப்பாவி ''அம்மா''ண்ணு சொல்லாதடா. ஒடம்பே நடுங்குது.

*மகன் :* !!!

*த. முருகன், மருக்காலங்குளம்*

''ஏய் ரேகா! ஒன்னோட புருஷங்கிட்ட நேத்து எதையோ சத்தம் போட்டு பேசிக்கிட்டு இருந்தயே என்ன விசயம்''?

''ஆமாண்டி, எனக்கும் மாமியாருக்கும் நடக்கும் சண்டைய சமரசம் செய்யணும்னு நெனச்சா ஆக்ரா பேலஸ் ஓட்டலுலதான் வைக்கணும்னு திட்டாந்தரமா சொல்லிட்டேன்.

கவிஞர் த. முருகன், *மருக்காலங்குளம்*




★ "எனக்கு இன்டர்நெட் மேரேஜ்தான் நடக்கும்னு எப்பவும் சொல்லிக்கிட்டு அலைவானே நம்ம கல்யாண் இப்போ எதுக்குடா ஒரே சோகமா இருக்கான்"?

"இன்டர்நெட்டுல ஒரு பார்ட்டியை தினமும் ஜொள்ளு விட்டுக்கிட்டு இருந்தான். நேத்துத்தான் தெரிஞ்சது அது பார்ட்டி இல்ல 80 வயசு பாட்டின்னு அதான் சோகம்.

கவிஞர் த. முருகன், மருக்காலங்குளம்

★ "திருடனுக்கும் அரசியல் வாதிக்கும் ஒரு வித்தியாசம் சொல்லு"?

"தெரியலையே"?

"வெரி சிம்பிள். வெறும் 100 ரூபாய சுருட்டினா அவன் திருடன். 100 கோடிய சுருட்டினா அவன்தான் அரசியல்வாதி.

த. முருகன், மருக்காலங்குளம்

"என்ன ஏட்டையா இவ்வளவு தூரம் என்னைய தேடி வந்திருக்கீங்க சொன்னா நானே மாமூலை கொண்டு வந்திருப்பேனே".

"அதெல்லாம் வேணாம். ஒன்னோட ஏரியாவுல இருக்கிற ஸ்கூல்ல என் பையனுக்கு எல்.கே.ஜி-யில ஒரு சீட்டு வாங்கி கொடுத்தேன்னா புண்ணியமா போகும்".

த. முருகன், மருக்காலங்குளம்

கணவன் : ''ஏண்டி நீ நேத்து பக்கத்து வீட்டு மனோகரோட பீச்சுக்கு போணியாமே''

மனைவி : ''நீங்ககூடத்தான் எதித்தவீட்டு அமலாவோட தியேட்டருக்கு போனீங்க நான் ஏதாவது கேட்டனா?''

*த. முருகன்,* மருக்காலங்குளம்



*வாத்தியார்* : ''சார் நீங்க பஸ்ல டிரைவரா இருக்கீங்களா''?

''ஆமா சார் எப்படி கண்டுபிடிச்சீங்க''

*வாத்தியார்* : ''ஒங்க பையங்கிட்ட கேள்விய கேட்டுக்கிட்டு விசில ஊதினாத்தான் பதிலே சொல்றான்''

*கவிஞர் த. முருகன்,* மருக்காலங்குளம்



*மனைவி* : வேலைக்காரி உங்க மேலே கட்டி அனைக்கிற மாதிரி உரசிட்டுப் போறா. பேசாம நிக்கிறீங்களே ?

கணவன் : திரும்பி வரட்டும் நானும் பதிலுக்கு அவ மேல உழறமாதிரி உரசிக் காட்டுறேன்.



*அம்மா* : ஏம்மா புகுந்த வீட்டுல போயி நம்ப மாப்பிள்ளையை, வாடா போடான்னு கூப்பிடுறியாமே உனக்கு இது கொஞ்சமாவது நல்லா இருக்கா?

*மகள்* : உனக்கு இத எவன்டி சொன்னான்னு கேட்கிறேன் !

★ இவ்வளவு வேகமா கார் ஓட்டிட்டு வர்றியே, வழியில போற என் மேலே மோதியிருந்தா என்ன ஆயிருக்கும் மடையா, உனக்கு ஏதாவது அறிவு இருக்காடா முண்டம்.

★ உங்கள இடிச்சு தள்ளி போக வேண்டிய இடத்துக்கு அனுப்பிருந்தா என்ன இந்த மாதிரியெல்லாம் பேசமாட்டிங்க மேடம்!



*வக்கீல்* : நீ ஓட்டி வந்த பஸ் ஆக்ஸிடென்ட் ஆவதற்கு முன்பு கடைசியா எதைபார்த்தாய்?

*பஸ் ட்ரைவர்* : ஒரு பெண்ணின் கிழிந்து போன ஜாக்கெட்டை சார்...!



★ *"டாக்டர் என் கணவர் தூக்கத்திலே சிரிக்கிறார்"*

*பாவம் தூக்கத்திலே யாவது அவர் சிரிக்கட் டும் விட்டுருங்களேன்.*

★ நம் திருமணத்துக்கு உங்க அப்பா அம்மா சம்மதம் தேவை இல்லைன்னு சொல் றே. பிறகு யார் சம்மதத்தை எதிர் பார்க்கிறே?

என் கணவர் சம்மதிப்பாரான் னுதான் யோசிக்கிறேன்.

33, தாயார்சாகிப் தெரு முதல்சந்து, சென்னை-2லிருந்து திருமலைப் பப்ளிகேஷன்சுக்காக வெளியிடுபவர் உரிமையாளர் ஆர். சேகர், சுலேகா பிரிண்டர்ஸ், சென்னை-5ல் அச்சிடுபவர் எஸ்.பி. குசால்ஷா.

ஆசிரியர் :
ஆர். ஞானசேகரன்

இணையாசிரியர்:
ஆர். தியாகராஜன்

அரைச் செவிடர்கள் இரண்டு பேர் பேசி கொண்டார்கள்.

"என்னப்பா வீட்டுக்கா

"இல்லப்பா வீட்டுக்குப் போறேன்"

"ஒஹோ. வீட்டுக்குப் போறதாக்கும்னு நெனச்சேன்".

இவ்வளவு விலைவாசி கிராக்கியா இருந்தாலும் பொது மக்களின் நலனுக்காக நான் சிப்பாகத்தான் வியாபாரம் செய்வேன்னு சொல்றீங்களே! நஷ்டமில்ல வரும்....?

நான் செய்யறது வாழைப் பழ வியாபாரம் அய்யா.





★ ரண்டா ப்டிக்கிரது உட்டுட்டு ரேடியோ கேட்டுகிட்டு இருக்கே?

உங்களுக்கு என்னப்பா தெரியும் ! பன்றி வளர்ப்பதைபற்றி விவசாய மந்திரி பேசுறாரு.

அப்ப சத்தமா வய்யி. நானும் கேக்கரேன் பிள்ள ! எப்படி வளாக்கரதுன்னு தெரியாம தவிச்சுட்டு இருந்தேன்.

★ இவ்வளவு தூரத்திலிருந்து பார்க்க வந்திருக்கியே, வெறுங்கையை வீசிகிட்டா வந்தே?

வெறுங்கையை வீசிகிட்டே வந்தா நல்லா இருக்காதுன்னுதான் என் பேண்ட் பாக்கெட்டிலே கையை விட்டுகிட்டு வந்து இருக்கேன்.

★ அம்மா உன் பேச்சை கேட்டு, டு விலர் மெக்கானிக்கை கல்யாணம் பன்னினது தப்பா போச்சு!



என்னை கொஞ்சற நேரமெல்லாம் குறடாவால் கன்னத்தை கிள்ளி, ஸ்பானரால் காதைத் திருகி சுத்தியால் தலையில்



கைதி 1 : பொதுஜனங்க சௌகர்யத்துக்காக மொபைல் வியாபாரம் செய்தேன். உள்ள தள்ளிட்டாங்க !

கைதி 2 : என்ன வியாபாரம் ?

கைதி 1 : சாராய வியாபாரம்தான்.

★ இந்த கதைய்ய அடுப்படியில்

எழுதினிங்களா?

ஒப்படி கண்டுபிடிச்சீங்க?

படிக்கும் போதே அனல் பறக்குதே!!

விருந்தாளி : பசங்க என்ன படிக்கிறாங்க?

தகப்பன் : பெரியவன் சோஷியாலஜி, அடுத்தவன் பயாலஜி - மூன்றாவது சைகாலஜி .... நாலாவது

விருந்தாளி : ஜீபாலஜியா..?

தகப்பன் : இல்லே பர்லாஜி. அது அவன் பேரு. இன்னும் பள்ளிகூடம் அனுப்பலே.




"அந்த சர்வீஸ் என்ஜீனியர் போலின்னு எப்படி சொல்றீங்க"?

"கம்ப்யூட்டர் ஸ்கிரீன் மங்கலா தெரியுதுன்னு சொன்னேன், அதுக்கு அவர் டார்ச் லைட் அடிச்சு பாருங்கன்னு சொல்றாரே !"

 "இந்த காமிராவை கொஞ்சம் கிளிக் பண்ணுங்க சார் !"

"ரைட் கிளிக்கா, லெஃப்ட் கிளிக்கா அல்லது டபுள் கிளிக்கா".

 "உங்க மகன் வருங்காலத் தில் பெரிய கம்ப்யூட்டர் என்ஜீனியர் ஆக வருவான்"

"எத வச்சு சொல்றீங்க?"

"உங்க பையன் பேருதான் கோபாலாச்சே !"

"மழைக்காலத்தில் விண்டோஸ் கத்துக்கக்கூடாது. ஏன் தெரியுமா"?

தெரியலையே !

"விண்டோஸைத் திறந்தால் சாரல் அடிக்கும் !"

 கம்ப்யூட்டர் "பூட்" ஆனா என்ன செய்வே?"

"கால்'ல மாட்டிக்குவேன்".

 "என் மகனிடம் விண்டோஸில் பெயிண்ட்பிரஸ் இருக்கும்னு சொன்னது தப்பா போச்சு !"

ஏன்? என்னாச்சி?

டூத்பேஸ்ட் இருக்குமான்னு கேக்குறானே !



"தலைவர் ஏன் கோபமா இருக்காரு?"

எந்தக் கடையில கேட்டா லும் 346, 456, 586 கம்ப்யூட்டர்தான் இருக்காம். '356' கம்ப்யூட்டர் இல்லையாம்''.




என்னது! எல்.கே.ஜி. படிக்கிற உங்க பையன் கம்ப்யூட்டர் வேணும்னு அடம் பிடிக்கிறானா ஏன்?

ஏ.பீ. தெரியுமாம் "சி" கத்துக்கிறதுக்கு கம்ப்யூட்டர் வேணும்னு சொல்றான்.

என்னங்க உங்க பையன் எப்பவுமே கம்ப்யூட்டரைப் பத்தியே நினைச்சிக்கிட்டிருக்கான்?

எத வச்சு அப்படி சொல்றீங்க?

ஜோக்ஸ் அப்படிங்கற வார்த்தைக்கு தமிழ்ல என்னன்னு கேட்டா 'சிரிக்' ஸீ ங்கறான்.

உங்க மாமியார எப்படி அடக்குற?

"Ctrl-H ஐ அழுத்தனும்"

அப்படின்னா?

எச் ஃபார் ஹஸ்பெண்ட்!



"அப்பா! தம்பிப் பாப்பா கம்ப்யூட்டர்ர ஒடச்சிட்டான்"

எப்படிடா ஒடச்சான்?

"நான் அவனைக் குறி வைத்து ட்ராக் பால வீசினேன். அவன் நகர்ந்துட்டான்''.

எம்.என். ஷாநவாஸ்,
காயல் பட்டினம் - 628 204.

கம்ப்யூட்டர் பக்கத்தில் கேரட்ட வைக்காதேன்னு சொன்னா கேட்டியா?

"ஏன்? என்னாச்சு?

"கேரட் எல்லாத்தையும் மவுஸ் சாப்பிட்டிடுச்சு"

★ என்னங்க இது காப்பியிலே ரெண்டு ஈ இருக்குது.

ஆமாங்க ! COFFEEலே இரண்டு E தானே !

ஷீலா பாலமுருகன்,
வேளங்கிப்பட்டு.

முதல்வன் : உன்னால பெரிய தலைவலியா இருக்கு.

*தொழிலாளி :* கவலைப் படாதீங்க. நம்ம கம்பெனி தயாரிப்பான ஜண்டுபாமை எடுத்துட்டு வரட்டா.

நிருபர் : உங்க படத்துக்கு ''சந்தனமரம்''னு டைட்டில் வைக்கப் போறதா சொல்றீங்களே ஏன்?

டைரக்டர் : முழு படத்தையும் காட்டுலதான் எடுக்கப்போறோம்.

இன்ஸ்பெக்டர் : நல்ல குடும்பத்தை சேர்ந்தவன் நீ. போயும் போயும் சைக்கிளை திருடிட்டு வந்திருக்கியே.

திருடன் : தப்புதான். இனிமே அப்படியெல்லாம் செய்ய மாட்டேன். பெரிய காரா பார்த்து திருடிட்டு வந்துர்ரேன்.



(கடற்கரையில் ஒருவர் பைத்தியத்துடன்)

*ஒருவர் :* கடலை வாங்குவோமா.

பைத்தியம் : உனக்கு என்ன பைத்தியமா பிடிச்சிருக்கு. கடல் எவ்வளவு பெரிசா இருக்கு. அதை எப்படி வீட்டுக்கு தூக்கிட்டு போறது.

*ஒருவர் :* நான் சொன்னது வேர்கடலையை.

★ இந்த டாக்டர் குழந்தை டாக்டரா இருக்கலாம். அதுக்காக இப்படியா...

அப்படி என்னதான் செய்றாரு.

இன்னமும் விரலை சப்பிக்கிட்டே இருக்காரு.

★ ஆங்கில மருந்து சிறந்ததா? அல்லது நாட்டு மருந்து சிறந்ததா?

முதல்ல எந்த நாட்டு மருந்துன்னு சொல்லுங்க.



★ ரசிகர் : அந்த டைரக்டர் பெரிய குடிகாரராச்சே!

ரசிகர் : அதான் அவர் படம் ஊத்துக்கிச்சோ !

(மருந்துக்கடையில்)

ஒருவர் : தேள்கடி மருந்து கொடுங்க.

கடைக்காரர் : இப்பதானே வாங்கிட்டு போனீங்க.

ஒருவர் : கொட்டிட்டுங்க.

கடைக்காரர் : என்னது தேளா.

ஒருவர் : இல்லை மருந்துங்க.



ஒருவர் : கடைக்காரரே ஒரு சொட்டு நீலம் தாங்க.

கடைக்காரர் : ஏங்க இப்படி கஞ்சத்தனமா இருக்கீங்க. ஒரு பாட்டிலா வாங்கிக்கங்க.

எஸ்.எம்.பி. அபூபக்கர்
காயல்பட்டினம் - 628 204.

★ காணாமல் போன உங்க கணவரைப் பத்தி ஏதாவது சொல்லுங்க.

அவர் யார் கூடையும் பேசவே மாட்டாரு. அவ்வளவு ஏன்? என்னிடம் கூட பேசினது கிடையாது.

அவ்வளவு சாதுவானவரா இருக்காரே.

அதான் இல்லை அவரு வாய் பேச முடியாத ஊமை.



# புதுக் கவிதைகள்



**வெளியீடு**
சின்னஞ் சிறு
செயல்களால்
உன்னை வெளியிடு!
பகட்டு வார்த்தைகளால்
அல்ல!



**குடை**
துன்ப மழை வரும்போது
மனித நேயக்
குடையை விரி!
மக்கள் உன்னருகே -
வந்து நிற்பார்கள்

**''வதந்தி''**
''வதந்தி''யை
ஊதிவிடும்
உதடாக இருக்காதே!
தந்தி போல் பேசு!
நல்லதே பேசு!



**தீயை வை**
நல்லவனை
போற்று!
தீயவனைத்
தூற்று
தீயவற்றிற்குத்
தீயை வைத்தால்
நல்லவை ஒளிவிடும்.



**முதுமை**
40 வயது -
இளமையின் முதுமைக்
காலம்.
50 வயது -
முதுமையில் இளமை.

**சண்டை**
வழுக்கையோடு
ஏன் சண்டை?
நேசிப்போம்.

**நகைச்சுவை**



சிரிக்காத நாட்கள் -
வாழ்வில் -
சிறக்காத நாட்கள்.

*ச.ரே.பி,* கோவை-2.



அக்காக் குருவி :
எளிதில் பார்க்க முடியாத குரலை
மட்டும் கேட்கக் கூடியதாக
இருக்கும் குயில் இனத்தைச்
சேர்ந்த பழுப்பு நிறப் பறவை.

தீவிரவாதி
மனித சமுதாயத்தின்
அச்சுப் பிழை



குடிகாரன்
தெருவிளக்கு தரும்
வெளிச்சத்தைக் காணாதவன் !
தெருவிளக்குக் கம்பத்தைச்
சாய்ந்து கொள்ளவே
பயன்படுத்துவான்.



சிரிப்பு
சிரிப்பு ஒலிக்கும்
வீட்டிற்கு -
எல்லா நல்ல குணங்களும்
ஓடிவரும்.

தனிக்குடித்தனம்
பெற்றவர்களோடு -
இதயங்கள்
இணைந்திருக்கலாம்
ஆனால் -
கூடாரங்கள்
தனித்தனியே!
இருக்கட்டும்.



வெளிச்சம்
மகிழ்ச்சி வெளிச்சம்
பரவ -
ஒன்று விளக்காக
இருப்போம்!
இல்லை எனில் -
அதனைப் பிரதிபலிக்கும்
கண்ணாடியாகவாவது
இருப்போம்.
இதுவே வாழ்வின்
நோக்கம்!.



## புதுக் கவிதைகள்



☺ உன் நண்பன் வாயிலேயிருந்து பொய்தான் வருது.

பின்னே அவன்தான் அரசியல்வாதி பையனாச்சே.



தொண்டன் : இந்தாங்க! பக்கெட்டிலே தண்ணீர்!

தலைவர் : எதுக்கு?

தொண்டன் : எதிர்க்கட்சி செய்யறதை நெனச்சா என் அடிவயிறு பத்தி எரியுது''ன்னு நீங்கதானே சொன்னீங்க! இந்தாங்க தண்ணீர்! அணைச்சு கோங்க?

தலைவர் : !!!

☺ ''மரவியாபாரம் பண்ணின என் மாப்பிள்ளை நல்லா வியாபாரம் செய்யறார். நல்ல அதிர்ஷ்டசாலி''

''அதிர்ஷ்டக் கட்டை''ன்னு சொல்லுங்க.

☺ ''டாக்டருக்கு பொண்ணைக் குடுத்தது தப்பாப் போச்சு?''

*''ஏன்?''*

''ஆபரேஷன் செய்யாமலேயே, பணம் கேட்டு என் உயிரை எடுக்கிறார்.''

☺ ''பில் கலெக்டருக்கு பொண் ணைக் குடுத்தது தப்பாப் போச்சு?''

''எதை வெச்சு சொல்றே?''.

''பணம் கலெக்ட் பண்ண, கல்யாணச் செலவுக்கான பல செலவுகளுக்கு ''பில்கள்'' வாங்கி அனுப்பியிருக்காரு''

☺ ''என்னடா இன்னிக்கு சந்தோஷமாக இருக்கே?

''மம்மி ரிடன்ஸ்''

''படம் பார்த்த சந்தோஷமா?

இல்லைடா! என் அப்பாவுடன் கோவிச்சுகிட்டு பாட்டி வீட்டுக்குப் போன என் ''மம்மி'' ரிடர்ன் ஆயிட்டாள்!

*ச.ரே.பி,* கோவை-2.

☺ ''நம்ம தொண்டர்கள் ஏன் மலை உச்சியை நோக்கி ஏறிகிட்டு இருக்காங்க?''

''நம்ம கட்சியின் ''உச்ச'' மீட்டிங்குக்கு வாங்கன்னு சொன்னதை தப்பாப் புரிஞ்சுகிட்டாங்க போலிருக்கு!




*நிருபர்* : (நடிகையிடம்) உங்கள் அழகின் ரகசியம் என்ன?

*நடிகை* : என் மேக்கப்மேனைச் கேட்டுச் சொல்றேன்.

*நிருபர்* : ? ?

*அரசியல்வாதி (தன் நண்பரிடம்)*

கடிகார ரிப்பேர் பண்றவனுக்கு என் பொண்ணைக் குடுத்தது தப்பாப் போச்சு!

*நண்பர்* : எப்படி?

*அரசியல்வாதி* : நான் கேட்ட பணத்தை தராவிட்டால், உங்கள் ஊழல் நடிவடிக்கைகளை ''அக்கு அக்கா''ப் பிட்டு வைத்துவிடுவேன்னு பிளாக்மெயில் பண்றான்.



மாணவன் : ''அப்பா ஒரு கால்குலேட்டர் வாங்க வேண்டும் எனக்கு''

அப்பா (கிராமவாசி) : ''நமக்கு இருக்கிற வசதிக்கு கால்குலேட்டர் என்ன முழுகுலேட்டராகவே வாங்கிக்கொள்!''

• ஆர்.எம. லெட்சுமி

☺ ''ஒரு வாரமாக காஸ்டிரபுள்''

''உடனே டாக்டர்கிட்டே காண்பிக்க வேண்டியதுதானே!

''கேஸ் சிலிண்டரிலேருந்து வரு கிறது, சரியாக வரமாட்டேங்குது என்று சொல்ல வந்தேன்''

ஆர்.எம்.வி. இராமசாமி



நீதிபதி : "உன்னுடைய கடைசி ஆசை என்ன சொல் நிறைவேற்றி வைக்கிறோம்"

குற்றவாளி : "நாட்டில் பழிவாங்கும் அரசியல் மாறி நல்லாட்சி நடக்க வேண்டும். அதைப் பார்த்த பிறகு எனக்கு தண்டனை கொடுங்க சாமி!"

*ஆர்.எம்.வி. இராமசாமி*

○ "என்ன பையன் கம்பிய எண்ணி எண்ணிப் பார்க்கிறான்"

*"வேறொன்னுமில்ல எதிர் காலத்துல மந்திரியா வரணும்ன்னு ஆசைப்படுறான்"*

○ "எதுக்கெடுத்தாலும் அப்பாவக் கேட்கணும்ன்னு சொல்றாரு மாப்பிள்ளே! இதைக் கூடவா அப்பாவ கேட்கிறது"

"ஏங்க! என்ன?"

"இல்ல... முதலிரவு ரூமுக்குள்ளே போறதுக்குக் கூட அப்பாவ கேட்கணும்ங்கிறாரே!"

வலம்புரி லேனா, திருவாலம்பொழில்



○ "அமைச்சர் எதுக்கு உண்ணாவிரதம் இருக்கப் போறாராம்",

"ஊழல் குற்றச்சாட்டுக்களில் இருந்து பொது மன்னிப்பு கேட்டு"



○ "அதிக நாட்கள் அதாவது 31 நாட்கள் அமைச்சராக இருந்து சாதனைபுரிந்த பாலுச்சாமியை முன்னாள் அமைச்சர்கள் சங்கத்தின் சார்பில் வருக வருகவென வரவேற்கிறோம்"

*வலம்புரி லேனா,*
*திருவாலம்பொழில்*

○ "கட்சி என்னடா பதவி என்னடா அவசரமான உலகத்திலேன்னு பாடிட்டுப் போறாரே அவரு யாரு?"

"நேத்து வரைக்கும் அமைச்சரா இருந்தவராம்"

☺ : வித்வான் எப்படி லெட்டரை எழுத ஆரம்பிப்பார்.

☺ : கடம், கடமறிய ஆவல் என்றுதான்! *- சிட்டிசன்*



*கலா* : தட்டிலே போட்டதை மீதி வெக்காமல் சாப்பிடுங்கன்னு என் கணவர்கிட்டே சொன்னால் போதும் அப்படியே செஞ்சிடுவாரு?

*மாலா* : உன்மேலே அவருக்கு ரொம்ப பாசமா?

*கலா* : நீ வேறே! மீதி வெச்சா நான் அழுது அழுச்சாட்டியம் பண்ணிடுவேன்னு அவருக்கு ரொம்ப பயமாச்சே!

*மாலா* : !!!

*ச.ரே.பி. / கோவை-2*







☺ "எம்.பி." பதவி கிடைச் சிருச்சாம்!
அதான்! தலைகால் தெரியாமல் குதிக்கிறான்.

ச.ரே.பி. / கோவை-2

☺ நம்ம தலைவருக்கு பின்னாடி ஒருவர் பேசுறாரே! அவர் யாரு! அவருடைய பி.ஏ.வா?
இல்லீங்க! அவர் - நம்ம தலைவருக்கு "டப்பிங்" பேசுறவரு?

ச.ரே.பி. / கோவை-2



☺ கடவுள் (பக்தனிடம்) : பக்தனே, இந்தியாவில் லஞ்சம் எப்போது ஒழியும்?

பக்தன் : ஒரு லட்சம், சூட்கேஸில் வைத்துக் தாருங்கள்! பதில் சொல்லுகிறேன்.

கடவுள் : ? ? ? ?

ச.ரே.பி. / கோவை-2





☺ "காதல் பற்றி எத்தனை புத்தகம் எழுதியும் படிக்கும் அந்த எழுத்தாளருக்கு கொஞ்சம்கூட ஆர்வம் தணியவில்லையே.... ஏன் "

"அவர்தான் 'தழுவல் கதை மன்னர்' தணிகாச்சலம் ஆச்சே !"





☺ இராமாயணம்

மனைவியின் சாபனம் இரும்பாக என்னை மாற்றிடும் பொன்னாக்கி விட்டது.....

அடடா !

ச.ரே.பி. / கோவை-.



☺ நம்ம ஏட்டு சுப்பையாவை ஒரு கெட்டப் பயன்னு எதை வச்சு சொல்றே?

மாமூல் கேட்டுக் கேட்டு ரொம்பவும் கெட்டுப் போயிட்டாருன்னுதான்!

ஆர்.ஆர். சாமி, திருவண்ணாமலை

☺ (பார்க்கில்) ☺

மகன் :

(தந்தையிடம்)! அப்பா அதோ போறாரே அந்த தொந்தி சேட் என்ன வேலை செய்யறார்?

தந்தை :

அவர் பெரிய சுய தொழில் அதிபர்!

மகன் :

அது சரி! சற்று தூரத்தில் வயிறைத் தள்ளிக் கொண்டு ஒரு பெண் போகிறாளே அவளும் சுயதொழில் செய்பவளா?

தந்தை :

இல்லை மகனே! இது அவள் கணவன் செய்த தொழில்.

மகன் :

? ?

# இவர்களுக்கு பிடித்தது !

சந்திரிகாவுக்குப் பிடிக்காத சீய்க்காய்த்தூள் எது?

புலிமார்க் சியக்காய்த்தூள்.

விடுதலைப்புலி பிரபாகரனுக்கு பிடிக்காத் சோப் எது?


சந்திரிகா சோப்.

நேருவுக்குப் பிடித்த நடிகை யார்?


ரோஜா

சதாம் உசேனுக்குப் பிடிக்காத டெலிவிஷன் எது?


புஷ்.

அரிச்சந்திரனுக்குப் பிடித்த பிஸ்கட் எது?


ட்ரு பிஸ்கட்

ஜெயலலிதாவுக்குப் பிடித்த வார்த்தை எது?

ஜெயம்.



# புதுக் கவிதைகள்






## எவ்வளவு

நம் புண்ணிய
பாரதம் -

இந்திய நாடு -

இன்னும் எவ்வளவு
ஆண்டுகள்

"பசியின் தேசமாக"
இருக்கும் !

அரசியல்வாதி
களுக்கே
வெளிச்சம் !

## காதல் சமாதி

இறந்த
பின்னும்

மும்தாஜுக்கு
- மக்கள்
வரிப்பணத்தில்

ஓர் ஆடம்பரக்
காதல் சமாதி

தாஜ்மகால் -
இன்னும்

வீடுகளே
இல்லாமல் -

எவ்வளவு
ஏழை
ஷாஜகான்கள் !

நம்நாட்டில் -





☺ "உணவும் போட்டு... உடையும் கொடுத்து பாடமும் சொல்லிக் கொடுக்கறாங்களே....சொல்றியே தம்பி என்ன பாடம்....சொல்லிக் கொடுக்கறாங்க...?"

"ஜோக்" நடத்தற பாடம்".

பூத்தப்பாடி ராமலிங்கம், ஈரோடு.



☺ எல்லா நாட்டுப் பேய்களும் நம்ம... இந்தியா மேல... சுத்திக்கிட்டேயிக்குதே ஒரு பொம்பளைக்கு (சரியா?) "பேய்"வந்துஆடுது!"

"அது நிஜம்தானே... எல்லோரும் கடன் வாங்கி அனுபவிச்சிட்டு... திருப்பிக் கொடுக்காமலே..,

"தற்கொலை" பண்ணிக்கிறாங்களே...!"

☺ என் வீட்டுக்காரி வேலைக்காரியிடம்... "விபரமா" கேட்டு...கேட்டு தெரிஞ்சுக்குவாளே...?"

"அப்படி என்ன விபரம் தெரிஞ்சுக்குவா...?

"என்னிடமில்லாதது... அப்படி என்னடி உன்னிடமிருக்கு என் புருசனை மயக்கிட்டியேனு.. திட்டறதை சொல்ல வந்தேன்...!"





☺ மாமியாரும் ... மருமகளும் என்ன ரகசியம் பேசிக்கிட்டாங்க - ஒட்டு கேட்டியா?"

"வேலைக்காரியின் உயிர...ஏம்மா எடுக்கறீங்க? தீபாவளிக்கு காஞ்சிபுரம் போய்..." ½ டஜன் பட்டுப்புடவை 2 பேரும் எடுக்கப் போறாங்களாம்!"



☺ ஏண்டா ராமு! அங்கேயே ... ஸ்தம்பித்து..உட்கார்ந்துட்டே?

"ரோடுல...200 பஸ், லாரி திக்கும்போது நான் போன பஸ் மட்டும்....எங்கியாக் குதிக்கும்?"



☺ முன்னழகைப் பார்த்து நான் ஜொள்ளு விட்டேன்!"

"அப்புறம் என்ன நடந்தது...?"

"அவளே...கிட்டே வந்து கர்சிப்பால துடைச்சிவிட்டாளே?"

நிருபர் : "ஏன் நீங்க... கவர்ச்சியா நடிக்க மறுக்கிறீர்களாமே?"

நடிகை : "யாரப்பா.... அனியாயமா "நீயூஸ்" கொடுத்தது? - இப்போ நீயே பாரு..." கர்ஷிப் அகல "துணியைதானே ஒட்ட வைச்சிருக்கிறேன்?"

நிருபர் : (மயக்கமடைந்து சாய்கிறார் - நடிகையின் காலில்!)



நிருபர் : "சினிமாவில ... உங்க அபார "கவர்ச்சிக்கு" யார் காரணம்?"

நடிகை : "என்னையா...கவர்ச்சி கவர்ச்சிங்கறே?"

நிருபர் : "மேடம்! "வளர்ச்சிக்கு" என்பதை வாய் தவறி - தப்பா சொல்லிட்டேன்...!"

நடிகை : ?....??!!




☺ உங்ககிட்ட மட்டும் அந்த உண்மையைக் சொல்லி விடறேன். நீங்க....யாருக்கிட்டேயும் சொல்ல கூடாது!"

"சரி...சொல்லுங்க, நான் நம்பிக்கையானவன்!"

"உங்க 2-வது பொன்னு எனக்கு 10-பக்கம் "Love Letter" எழுதியிருக்காளே!"

"நகரத்தில்" விபச்சாரிகளை கண்டுபிடிச்சி பஸ் நிலையத்தில்....அவங்களின் படங்களை ஒட்ட வைச்சிருக் காங்களே...?"

"சௌகரியமா போச்சி!...முக லட்சணமுள்ளவளை தேடிப் பார்க்கலாம் வாடா!"



*"கடைக்கு அட்வான்ஸ் பணம் எவ்வளவு கட்டினே!"*

"ஒரு லட்ச ரூபாய் கொடுத்தேன்"

*"மாத வாடகை என்ன?"*

"ஏழாயிரம்!"

*"எவ்வளவு சரக்கு வாங்கிப் போட்டிருக்கிற?"*

"நாலு லட்சத்துக்கு எலெக்ட்ரிக் சாமான் வாங்கி அடுக்கி வைச்சிருக்கேன்!"

*"அடுக்கி வெச்ச கடைக்கு... 'டெக்ரேஷன்' செலவு என்ன?"*

"எழுபதாயிரம் ஆச்சி!"

*கடைக்கு ஆட்கள் எத்தனை சேர்த்திருக்கிற?"*

"என்னோட 4 பேரு!"

*அவன்களுக்கு எவ்வளவு சம்பளம்?"*

"மாதம் 1500, ஒருத்தவனுக்கு 2000, மற்ற 2 பேருக்கும் தலா 3000 கொடுக்கிறேன்!"

*"விற்பனை பரவாயில்லையா?"*

"இன்னும் யாருமே "சாமான் கேட்டு வாங்கலையே!"

## கடி ஜோக்ஸ்



*''அம்மா நீங்க என்னைவிட ரொம்ப...அழகாயிருக்கீங்கனு நம்ம தெருவே சொல்லுது!''*

''இதுதாண்டீ...இப்ப பெரிய தொல்லையாப் போச்சி!''

*''என்னம்மா தொல்லை?''*

''பெண் பார்க்க வந்த மாப்பிள்ளைகளெல்லாம்...உன்னைப் பார்க்காம...''என்னையே'' வைச்சக்கண்ணை எடுக்காம பார்த்துக்கிட்டு போயி...சொல்லி அனுப்பறாங்க!''

*''என்னம்மா சொல்றாங்க?''*

''மாமிமாதிரி... மனைவி இல்லையேன்னு ரத்தக் கண்ணீர் வடிக்கிறார்களே!''

*''அப்படியினா எனக்கு திருமணமே ஆகாதா?''*

''நிச்சயமா ஆகும்...பயப்படாதே வழி கண்டு பிடிச்சுட்டேன்!''

*''என்ன வழி?''*

''முகத்துக்கு மேக்கப்போடாம...கரியை பூசிக்கிட்டு உன் பக்கத்தில நிக்கப்போறேன்!''

○ *"ஏண்டா! நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டு...சே பாரேு, அங்கே என்ன நடந்திச்சு...நீ சாப்பிட்ட ஓட்டலில்...?*

"சப்ளையர், சர்க்கரைக்கு பதிலா மிளகாய் பொடியை போட்டுட்டான், எதிரிலிருந்து ஆபத்து!?

*"எதிரில் ஆபத்தா?"*

"ஆமாம்! "அவ" அழகை ரசிச்சிகிட்டே "மிளகா பொடியை" அள்ளி வாயில...போட்டுக்கிட்டேன்!"





○ *"ஏன் ஊதுபத்தி விற்பவரிடம் சண்டைப் போடறீங்கன்னு கேட்டா, 10 ரூபா அனியாயமா போச்சேன்னு...அழுவிறீங்க?*

"பின்னே என்ன செய்யுறது.... மேல் அட்டையில இருக்கிற சாமி படத்த பார்த்து... மயங்கிப் போயி ஊதுபத்தி வாங்கிட்டுப் போனா..பத்த வச்சவுடன் "சாக்கடை!" நாத்தம் அடிக்குதே?"

○ "மனதுக்குள் வைச்சிக்கோ...வெளியில சொல்லிடாதே ப்ளீஸ்!"

"உம்மை, "வைச்சிக்கப்போறேன்னு" நீங்க...சொன்னது, வெளியில சொல்லமாட்டேன்!" ஓடிப்போயி என் "புருசன்கிட்டே"...சொல்லுவேன்!"





○ "மார்பகத்தை "அடியோடு", எடுத்தாகணும்னு டாக்டர் எதுக்காக சொல்றாரு?"

"அவளுக்கு.... "மார்பக புற்று" நோய் வந்திருக்கே!"



## சூப்பர் ஜோக்ஸ் மீட்டிங் சூப்பர் ஜோக்ஸ் மீட்டிங்

ஜோக்ஸ்

"பில்கேட்ஸ் போல வா.....
ராமானுஜம் போல வா.....
எம்.ஜி.ஆர் போல வா.....
டெண்டுல்கர் போல வா....."

"ஜி.டி.நாயுடு போல வா.....
அன்னை தெரசா போல வா.....
பி.டி.உஷா போல வா.....
சகுந்தலாதேவி போல வா....."

"திலகவதி ஐ.பி.எஸ். போல வா.....
ஐஸ்வர்யாராய் போல வா.....
ஜெயலலிதா போல வா....."

- என்று நம்வீட்டு குழந்தை களுக்கு சின்னவயசில நாம் அனாவசியமாக "உப தேசம்" செய்தா லும் அந்த "சின்னஞ் சிறுசுகளுக்கு..." விளையாட்டின் பேரில் தான் ஞாபகம் அதிக (நாங்க... ஆடிப்பாடி விளையாட வேண்டா மா...?) மிருக்கும் என்பதை நாட்டு மக்களுக்கு வெளிச்சம் போட்டு அட்டைப் படத்தில் காட்டி யதற்கு முதல் பாராட்டு! முன்னேறத் துடிக்கும் சிறுவயது பள்ளி மாண வியர்களுக்கு அறிவுரை போதனை பாடப்பயிற்சி கொடுத்தமைக்கு 2-வது பாராட்டு" திலகவதி, திருச்சி

ஐயா, மாவட்டம் மாவட்டமா ஜோக்ஸ் மூட்டைகள் அவிழ்த்துக் கொட்டி அசத்திப்புட்டீங்க. மாவட்ட மெல்லாம் முடிஞ்சதும் மாநில சூப்பர் ஜோக்ஸா? பஞ்சாபி சர்தார்ஜி பெங்காலி ஜோக் ஸும் ரெடியா? மாவட்டம், மாநிலம்னு அட்டையிலிருந்து அட்டை வரை பக்கத் துக்குப் பக்கம் 'டாப்' படங் களுடன் சூப்பர் ஜோக்ஸ் கனஜோர்!

சாமி, திருவண்ணாமலை

நாமக்கல்ல என் ஜோக்ஸ் ந(ாம)க்கல் என நச்சு நச்சுன்னு பாம்பு கொத்தறமாதிரி மனசுல 'பதிய வைச்சுட்டார் தளவதி சேனூர் எம்.ஏ. சந்திரசேகரன் அவருக்கும் அவரோடு சேர்ந்து எங்களை திகைக்கவைத்த சி(ரி)ப்பிகளுக்கும் என் வாழ்த்துக்கள்.

நிம்மேலி பால கண்ணன்,
தஞ்சாவாவூர்

சூப்பர் ஜோக்ஸ் அட்டைப்படம் ஜோர் சூப்பர் சார். மகிழச்சியான 2-ம் ஆண்டு அடியெடுத்து வைக்கும் வாசகர்களின் இதயங்களின் பூரிப்பு ஏற்படுத்திவிட்டீர்கள்.

சோமசுந்தரம், தருமாபுரி

ஆசிரியருக்கு வணக்கம்!

சூப்பர் ஜோக்ஸ் 2-2 படித்தேன். வாசகர்கள் பதிலளிக்கிறார்கள் என்றறிவித்ததும் எப்படியிருக்குமோ என்று நினைத்தேன்.

'அசத்தி விட்டார் திருமதி கமல் கணேஷ், பாராட்டுக்கள் !

மேலும் அடுத்த இதழில் என்ன புதுமை செய்யப்போகிறீர்கள் என்ற ஆவலைத் தூண்டும் புதுமைச் சக்கரவர்த்தியான உங்களுக்கு வழக்கம்போல' எனது வாழ்த்துக்களுடன் தொடர்கின்றேன்.

நாகை. எஸ். பாலமுரளி,
நாகப்பட்டினம்.

சென்ற மாத தலையங்கம் அருமையாக இருந்தது. அதில் ஆண்ட்டி, ப்யூட்டிக்கு விளக்கம் அளித்துள்ளது உமது குசும்பினை வெளிப் படுத்துகிறது.

சிட்டிசன், திண்டுக்கல்

ஆசிரியரை எனக்கு எப்படி புகழறதுன்னே தெரியல. இப்படி கடலூர் மாவட்டத்தை சிறப்பு பகுதியா போட்டு அசத்திட்டீங்க. உங்களுக்கு என் நன்றியை தெரிவிச்சுக்கிறேன். இப்படி ஜோக்ஸ் எல்லாத்தையுமே திருத்தி இன்னும் சுவைபட எழுதியவைக்கும் நன்றி. இப்படி புத்தம் புது வாசர்கள் எல்லாம் உருவாவதற்கு, ஆரம்ப ஆசிரியர் நீங்கள் என்பதில் எங்களுக்கு பெரும் மகிழ்ச்சியை அளிக்கிறது.

பாலமுருகன், வேளங்கிப்பட்டு.

இரட்டை மாவட்டம் சிறப்பிதழில் நாமக்கல் - கடலூர் பேயர்கள் ஜோக்ஸ் வாய் விட்டு நிறையவே சிரிக்க வைத்தனர். சூப்பர் ஜோக்ஸ் புக் இன்றைய மாணவர்கள் குறிப்பாக F.M. வானொலி (இனியராகம் 10a.m to 2p.m.) நேயர்கள் கையில் வைத்து கொள்ள ஒரு அரிய பொக்கிஷ புத்தகமாக இருந்தது.

நன்றி, சூப்பர் ஜோக்ஸ்க்கு

கே. பட்டாபி, சென்னை-4.

நீண்ட இடைவெளிக்குப் பின்பு இம்மாதம் "சூப்பர் ஜோக்ஸ்" இதழை (சு)வாசித்தேன். மிகவும் அருமை! அதிவிரைவில் கடிதங்களும், படைப்புகளும் அனுப்ப முயல்கின்றேன்.

குமார், கோவை

அன்பு ஆசிரியருக்கு,

தங்கள் இதழ் சூப்பர் ஜோக்ஸ் படித்தேன். தடைபடாமல் வழங்கவும் இரட்டை மாவட்ட சிறப்பிதழாக மலர செய்தது மகிழ்ச்சி. எந்த ஒரு மாவட்டக்காரர்களும் நாங்களும் சளைத்தவர்கள் அல்ல என மீண்டும் மீண்டும் நிருபிக்கிறார்கள். கவிதை மாடத்தில் எனது கவிதையினை வெளியிட்டமைக்கு நன்றி. திருமதி கமல்கணேஷ் வாசகர்களின் கேளவிக்கு அருமையான பதிலை அளித்துவிட்டார் (அசத்திவிட்டார்). ஒவ்வொரு ஜோக்கும் தலைப்பிட்டு அசத்தி விட்டீர்களே. முன்பக்க அட்டைப்பட ஜோக் தற்போதைய நிலைமையை எடுத்துக் காட்டியது. 'கலாட்டா கோடீஸ்வரன் சிரிப்புகள் பலவிதம். காதலின் வகைகள் சைலன்ட் ஜோக்ஸ் போன்றவையும் அருமை.

வை. சுப்ரமணியன்,
பெத்தநாயகன் பாளையம்.

அன்புள்ள ஆசிரியருக்கு வணக்கம்.

சூப்பர் ஜோக்ஸ் இதழைக் கண்டேன். ஜோக்ஸ் அனைத்தும் சூப்பரோ சூப்பர். கேட்கிறோம் சொல்லுங்கள் பகுதியில் திருமதி. கமல்கணேஷ் அவர்கள் பதிலளித்த விதம் மிகவும் அருமை.

ஷாநவாஸ், காயல்பட்டினம்.

# சிரிப்புகள் பலவிதம்...

☺ ''அதோ அங்கேப் போறாரே அவர் நல்லா ''கதை!'' எழுதுவாரு!''

''நல்ல கதை எழுதுவாரா, கதை அளப்பாரா?''



☺ ''அடுத்த தலை முறைக்கே சொத்து தீராது... நீங்கல்லாம் வந்து கடன் வாங்கறீங்களே?''

''சார்! ''செம அசத்தலாப்'' பாராட்டாதீங்க... என் தந்தையை எதிர்த்து தேர்தலப் போட்டியிடப் போறேன்!

☺ ''அந்த ஆசாமி நல்ல நகைச் சுவையுடன் ''ஜோக்ஸ்'' எழுதுவார்னு... எப்படி சொல்றீங்க?''

''2 பவுன் நகை (செயினை)யை வித்து ''கார்டுகள்'' வாங்கி லாரியில் கொண்டு போகிறாரே...!''



☺ ''உங்க கேமிராவை திருட்டு போயிட்டது புகார் செய்தீங்களே... போலீசிலிருந்து பிடிச்சிக் கொடுத்துட்டாங்களா...?''

''கேமிராவை பிடிச்சாங்க, ஆனா என்னிடம் கொடுக்கலே...!''

''ஏன் உங்க பொருள கொடுக்கலையா?''

''சூப்பர் கிளிக்'' கேமிரா ஆச்சே... சொந்த உபயோகத்துக்கு வச்சிக்கிட்டாங்களாம்.

# சிரிப்புகள் பலவிதம்...



☺ "வாங்க சார்...நலமா இருக்கீங்களா...?"

"நல்லதுக்கு...என்னாங்க குறைச்சல்...?"

"ஏன் சலிப்பா... பேசறீங்க?"

"வந்தபோதெல்லாம் நலம் விசாரிக்கிறீங்க..."நயாபைசா" வட்டிக் கொடுப்பதில்லையே!"



☺ "அடியே...அங்கே பாரடீ...! அவ எவ்வளவு லட்சணமா "அழகே உருவமா" இருக்கிறாளே...?

"ஏண்டி அவள் பேரில பொறாமைப்படறே..?"

"நான் "அவள்" மாதிரி அழகாக இல்லையேனு சொல்ல வந்தேன்!"

☺ "பத்து நாளா...ஏன் நம்ம தெருபக்கமே நீங்க வரலைன்னு தெரிஞ்சிக்கலாமா...?

"மீந்துபோன குடல்கறியை 3 நாளைக்கு "பிரிஜ்ஜில்" வைச்சிப் போடறீங்கனு... தெரிஞ்சிக்கிட்டதால்...!"



☺ "ஏண்டா....நீ ஆங்கில இலக்கியத்தில் பி.ஏ.படிச்சதுக்கு உங்க வீட்டில பாராட்டுக் கிடைக்கலை...?"

"என் அப்பா தமிழ் இலக் கியத்தில் "புலவர்" பட்டம் பெற்றவராயிற்றே...!?"



# சிரிப்புகள் பலவிதம்...

தந்தை : "வீட்டில் காலடி எடுத்து வைக்காதே... போடா வெளியே!"

மகன் : போடா வெளி யே!" "என்னையா அப்படி சொல்றீங்க...?"

தந்தை : "ஆமாண்டா, கலப்புத் திருமணம் செய் துட்டு வந்து நிக்கிறீயே!"

மகன் : "நீங்க சொன்ன படி சித்தி வீட்டில (உங்க சின்னவீடு) நான் பொண்ணு "கட்டிக்க" முடியுமா?"





"பங்களா வாசியா இருந்த அவரு ஏன் குடிசைக்கு மாறிட்டார்னு கேட்டியே...என்ன சொன்னாரு?"

"சம்பளம் பூராவும் வாடகை வீட்டுக்கே சரியாப் போயிடதாக் குடிசைக்கு வந்துட்டா... "நல்ல சாப்பாடு" சாப்பிடலாம்னு சொல்றாரு!"

# சிரிப்புகள் பலவிதம்...

☺ ''கத்தியிலே...குத்தி, குத்தி அந்த ரவுடியைக் கொன்னுட்டாங்களே...?''

''கத்தியை எடுப்பவன், கத்தியாலதான் மடிவான்னு நீ கேள்வி பட்டதில்லையா...!''





☺ நல்லா இருந்தாரே அந்த பெரியவரு...ஏன் தற்கொலை செய்துக் கிட்டாரு...?''

''தண்டச்சோறு'', தண்டச் சோறு'' என்று அந்த வீட்டி லுள்ள மனைவி மக்கள், பேரன் பேத்தி 16 பேரும் கிழவனை பார்த்து ''தினசரி 108 தடவை'' திட்டினாங் களாம்...!!''



# சிரிப்புகள் பலவிதம்...

*தாய் :* ''உம்மை 16 மாதம் சுமந்து நான் பெத்தவ... எனக்கு ஏன் மரியாதைக் கொடுக்கல...?''

*மகன் :* ''உன் மருமக [என் மனைவி] கொடுக்க வேண்டாம்னு சொல்றாளே!''

தாய் : ?....?!





☺ *''எனக்கு உங்கள பார்த்தவுடன் ஒரு மாதிரியான ''சுகம்''.... வருதுன்னு அந்த பொண்ணு லெட்டர் எழுதிக் கொடுத்திருக்காளே!''*

''நேத்திக்கு அவளை... A/c ரூம்ல- கொண்டு போயி படுக்க வைச்சேன்!''

☺ *''சார்...உங்களுக்கு என்ன ''ஜட்டம்'' பிடிக்கும்...? ஆர்டர் கொடுத்தா கொண்டாறேன்!''*

''எனக்கு [ஒரு அழகான பொண்ணு எதிரில்] ''நல்ல ஜட்டமெல்லாம் பிடிக்கும்''...கொண்டாப்பா!''



# சிரிப்புகள் பலவிதம்...



☺ "நம் கட்சித் தலைவர் நெனைத்தால் நடக்கும்!"

"என்ன நடக்கும் சொல்லு?"

"நம்ம 2 பேருக்கும் மந்திரிபதவி வரபோகுதாம்"

☺ "அவரு காது...திடீர்னு கேட்காம போனதற்கு...கோயில் போய் பிரார்த்தனை வைச்சிட்டு வந்திருக்காரு".

"இப்போ காது நல்லா கேட்குதா?"

"காதே கேட்க கூடாதுன்னு"... வேண்டிக்கிட்டாரே!"

"என்ன காரணம்?"

"பொண்டாட்டி திட்டறதும், கடன்காரங்க... வந்து கத்தறதும் "காதிலே" விழக் கூடாதாம்!"





☺ "ஓடிப் போயி போனில பேசினியே யாரிடம்...என்ன பேசினே?"

"பத்து பைசாகூட கையிலில்லை - உடனே பஸ்க்கு 20 ரூபா கொடுத்தனுப்பக் சொன்னேன், காரணம்... பிக்பாக் கெட்.... அடிச்சிட்டாங்க!"

# தமிழ் சினிமா நகைச்சுவை

– நடிகர் யார் ?

1. நல்லதம்பி படத்தில் நடித்த நகைச்சுவை நடிகர் பெயர்?

அ) டி.எஸ்.துரைராஜ் ஆ) என்.எஸ். கிருஷ்ணன்
இ) குலதெய்வ ராஜகோபால்

2. 'காமெடி கிங்' என்ற பட்டப்பெயர் பெற்ற நகைச்சுவை நடிகர் பெயர்?

அ) என்.எஸ். சந்திரன் ஆ) எஸ்.வி.சேகர் இ) விவேக்

3. 1940ல் புகழ்பெற்ற நகைச்சுவை ஜோடி நடிகர்கள் பெயர்கள்?

அ) காளி என் ரத்தின் - சிடி ராஜகாந்தம் ஆ) என்.எஸ்.கிருஷ்ணன் - டி.ஏ.மதுரம் இ) தங்கவேலு - சரோஜா

4. கின்னஸ் புத்தகத்தில் இடம்பெற்ற நகைச்சுவை நடிகையர் பெயர்?

அ) டி.ஏ.மதுரம் ஆ) அங்கமுத்து இ) மனோரமா

5. வக்கீலாகவும், பத்திரிகையாளராகவும் உள்ள நகைச்சுவை நடிகர்?

அ) நாகேஷ் ஆ) வடிவேலு இ) சோ

கீழே கொடுக்கப்பட்டுள்ள இந்த கேள்விகளுக்கு
பதில் எழுதி அனுப்பி வையுங்கள்.
அனுப்பவேண்டிய முகவரி :

திருமலை பப்ளிகேஷன்ஸ்
"சூப்பர் ஜோக்ஸ்"
தபால் பெட்டி எண். 2748
அண்ணாசாலை, சென்னை-600002.




ஏண்டா!.. ஓடிப்போயி அனாவசியமா அவள.. கட்டிபுடிச்சி.. இப்போ போலீசில வசமா மாட்டிக்கிட்டயே?''
"அவ..தானே நான் சும்மாபின்னால ... போவனை "கட்டிப் புடிடா.., கட்டிப்புடிடான்னு" பாடினாளே?''